Licensed to Post Without Pre-Payment Licence No G 6T N MS CPP 55
ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவர் தலைமையில்

Regd No. TN-MS [C] 244 Phone 420212 4 பக்கம் விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 8 7 87 புதன் வெளியீடு வியாழன் 9 7 87 இதழ் 258

# எம்.எல்.ஏ.க்கள் கூட்டம்



## சென்னையில் வரும் சனிக்கிழமை ஆலோசனை

சென்னை, ஜூலை, 8 முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் கழக எம். எல். ஏக்கள் கூட்டம் வரும் சனிக்கிழமை நடக்கிறது என்று அரசு கொறடா துரை. கோவிந்தராசன் அறிவித்துள்ளார்.

அரசு கொறடா துரை கோவிந்தராசன் வெளியிட்டுள்ள அறிவிப்பு வருமாறு:

மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்கள் தலைமையில் சட்டமன்ற உறுப்பினர்கள் கூட்டம் 11·7 87 சனிக்கிழமை காலை 10 மணிக்கு தலைமைக் கழகத்தில் நடைபெற இருக்கிறது.

கூட்டத்தில் சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ள அன்புடன் வேண்டுகிறேன்.

இவ்வறிவிப்பு இதய தெய்வம் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்களின் அனுமதியுடன் வெளியிடப்படுகிறது.

இவ்வாறு அரசு கொறடா துரை கோவிந்தராசன் அந்த அறிவிப்பில் கூறியுள்ளார்.

## யாழ்ப் பாணத்திற்கு 3-வது கப்பல் புறப்பட்டது

சென்னை ஜூலை 8. பட்டினியால் வாடும் யாழ்ப்பாண மக்களுக்கு 800 டன் உணவுப்பொருள்களுடன் 'ஜலண்ட் ப்ரைடு' கப்பல் இன்று காலை சென்னையை விட்டு புறப்பட்டுச் சென்றது.

கப்பல் மூலம் உணவுப் பொருள் சப்ளை செய்வது இது 3வது முறையாகும்.

நேற்றே இந்தக் கப்பல் புறப்பட வேண்டியது ஆனால் பயணம் தடைபட்டு இன்று புறப்பட்டுச் சென்றது.




# யாழ்ப்பாணம் பகுதிமீது மீண்டும் படை எடுக்க ராணுவம் முஸ்தீபு

யாழ்ப்பாணம், ஜூலை 8. யாழ்ப்பாணம் பகுதி மீது மீண்டும் படை எடுக்க சிங்கள ராணுவம் முயற்சிகளை எடுத்து வருவதாக கூறப்படுகிறது.

இது குறித்துவிடுதலைப் புலிகள் தெரிவித்துள்ளதாவது:

இலங்கைஜனாதிபதிஜே. ஆர் ஜெயவர்த்தனே தலைமையில் நடைபெற்ற இலங்கை தேசிய பாதுகாப்புச் சபைக்கூட்டத்தில் வடமராட்சியையும் யாழ் குடாநாட்டின் ஏனைய பகுதிகளையும் இராணுவப் படையெடுப்பு ஒன்றின் மூலம் தமது கட்டுப்பாட்டிறகுள் கொண்டுவருவது பற்றி கலந்தாலோசிக்கப் பட்டதாக தெரிகிறது.

இக்கூட்டத்தில் ஜனாதிபதி தேசிய பாதுகாப்பு அமைச்சர் லலித் அதுலத்முதலி முப்படைகளின் கூட்டுக் தளபதி ஜெனரல் ரணதுங்கா உட்பட முக்கிய இராணுவ அதிகாரிகள் பலரும் கலந்துள்ளனர்.

இத்தேசிய பாதுகாப்புச் சபைக்கூட்டத்தில் எடுக்கப் பட்ட முடிவின்படி தென் பகுதியிலுள்ள ஆயுதப்படை முகாம்களிலிருந்து கடற்படை. தரைப்படை, விமானப்படை, போலீஸ் காமாண்டோக்கள் யாழ் குடாநாட்டிற்கு உடனடியாக அனுப்புவதற்கான உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

இதைத் தொடர்ந்து வவுனியா மாவட்ட இணைப்பதிகாரி பிரிகேடியர் கொப்பேகடுவவும் களுத்துறை இணைப்பதிகாரி பிரிகேடியர் கருணாபுலவும் நேற்று நண்பகல் பலாலி விமானநிலையம் வந்து சேர்ந்துள்ளனர்.

### ராணுவத்தின் வெறிச்செயல்

வெளிநாடுகளில் வேலை வாய்ப்புத் தேடி கொழும்பிலுள்ள வெளிநாட்டு வேலைவாய்ப்பு ஸ்தாபனம் ஒன்றிற்கு நேர்முகப் பரீட்சைக்குச் சென்று திரும்பும்வழியில் அனுராதபுரம் ரயில் நிலையத்தில் சிங்கள ராணுவத்தினரால் கைது செய்யப்பட்ட 21 தமிழ் இளைஞர்களில் 6 போ தவிர்த்தஏனையோர் துப்பாக்கி முனையில் அனுராதபுரம் ஆஸ்பத்திரிக்கு அழைத்து செல்லப் பட்டுபலவந்தமாக இரத்த தானம் செய்தபின் தனியார் பஸ்களில் யாழ்ப்பாணம் அனுப்பிவைக்கப் பட்டனர்.

இவர்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் தலா ஒரு பைண்ட் இரத்தம் பெறப்பட்டது. அனுராதபுர ஆஸ்பத்திரியில் சிகிச்சைபெறும். காயப்பட்ட சிங்கள இராணுவத்தினருக்கே உங்கள் இரத்தம் தேவையெனகூட்டிச் செல்லும்போது தெரிவிக்கப்பட்டதாம்

கடந்த இரண்டு வாரங்களுக்குள் மட்டக்களப்பு. அம்பாறை மாவட்டங்களில் கைது செய்யப் பட்ட தமிழர்களின் நிலை பற்றி இதுவரை எதுவும் தெரியவில்லை இம்மாவட்டங்களில் சிங்கள அதிரடிப் படைப் பிரிவினால்கைது செய்யப்படுவோர் பற்றிய தகவல்கள் எதுவும் பெற முடியாத நிலையில் உள்ளது படையினரை விசாரித்தால் நாம் எங்கே கைது செய்தோமென இராணுவ அதிகாரிகள் கைவிரிப்பதாக இப்பகுதி பிரஜைகள் குழுவினர் தெரிவித்துள்ளனர்.

### உயிருடன் எரிப்பு

மன்னார் மாவட்டத்திலுள்ள உயிலங்குளம் எனுமிடத்தில் சைக்கிளில் சென்று கொண்டிருந்த இருவர் இராணுவத்தினரால் சுட்டு கொல்லப் பட்டதன் பின்னர் சைக்கிளுடன் சேர்த்து எரிக்கப் பட்டுள்ளனர்

அடம்பனைச் சேர்ந்த கருணைநாதன், வயது 51 ச. கதிரகாமலிங்கம் வயது 54 ஆகியோரே எரிக்கப் பட்டவர்கள் ஆவர் இவர்கள் இருவரும் மரணவீடு ஒன்றிற்குச் சென்று திரும்பும் வழியிலேயே இச்சம்பவம் நடைபெற்றது.

காங்கேசன் துறை சிமெண்டுத் தொழிற்சாலையில் உற்பத்தி வேலைகள் நிறுத்தப்பட்டதை அடுத்து வட பகுதியில் சிமெண்டுடன் சம்பந்தப்பட்ட உற்பத்திக் கட்டிட வேலைகளில் ஈடுபட்டுவந்த ஆயிரக்கணக்கான தமிழர்கள் வேலை இழந்துள்ளனர். பல கட்டிட வேலைகள் இடையில்நிறுத்தப்பட்டுள்ளன. இதனால் பெருந் தொகையான கட்டிடத் தொழிலாளர்களும். மரவேலைத் தொழிலாளர்களும், இன்னும் இவற்றுடன் சம்பந்தப்பட்ட பல ஆயிரக்கணக்கானோர் வேலை இழந்துள்ளனர் இதுசிங்கள அரசின் தமிழர்கள் மீதான இனஒழிப்பு நடவடிக்கையின் ஓர் அம்சமாகும்.

இவ்வாறு அவர்கள் தெரிவித்துள்ளனர்.

### வடமராச்சியை புலிகள் பிடித்தனர்

நெல்லியடி இராணுவ முகாம் விடுதலைப்புலி வீரர்களால் தகர்க்கப் பட்டதைத் தொடர்ந்து வடமராட்சியின் பல பகுதிகள் மீண்டும் விடுதலைப் புலிகளின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டுள்ளது

கடந்த மூன்று நாட்களாக தொடர்ந்து நடைபெற்ற கடும் சண்டைகளின் விளைவாக சிங்கள இராணுவத்தரப்பில் பெரிய உயிரிழப்புகள் ஏற்பட்டது விடுதலைப்புலிகளின் வீராவேசமான எதிர்த்தாக்குதல்கள் காரணமாக இராணுவத்தினர் வெளியே நடமாட முடியாதவாறு முகாம்களுக்குள் முடங்கிக்கிடக்கின்றனர் அதே சமயம் வடமராச்சியிலுள்ள பலஇராணுவ முகாம்களை சுற்றி விடுதலைப் புலிகள் முற்றுகை யிட்டுள்ளனர் தொண்டமனாறு வல்வெட்டித்துறை மண்டான் பருத்தித்துறை பொலிகண்டி மந்திகை ஆகிய இராணுவ முகாம்களைச் சுற்றி விடுதலைப்புலிகள பாதுகாப்பு அரண்களை அமைத்து முற்றுகையைப் பலப்படுத்தியுள்ளனர்

# புரட்சித்தலைவர் உறுதிஏற்று டாக்டர்கள் ஸ்டிரைக் வாபஸ்

சென்னை ஜூலை. 8. டாக்டர்கள் பிரச்சினைகள் குறித்து "தானே நேரில் அவர்களை சந்தித்துப் பேசத் தயார்" என முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்தார். இதையொட்டி டாக்டர்கள் அறிவித்திருந்த போராட்டத்திட்டத்தை வாபஸ் பெறுவதாக அறிவித்துள்ளனர்

இது குறித்து அமைச்சர் ப. உ. ச நிருபர்களிடம் கூறியதாவது:

டாக்டர்கள் பிரச்சினை பற்றி முதல்வர் புரட்சித் தலைவருடன் பேசினேன், ஏற்கனவே எழுதிக் கொடுத்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டவர்கள் இப்போது ஏன் போராட்டத்தில் ஈடுபடுகிறார்கள் என முதல்வர் கேட்டார்.

இப்பிரச்சினை குறித்து முதல்வரிடம் விளக்கினேன் இதற்குப்பின் டாக்டர்களை நானே சந்தித்துப் பேசுகிறேன் அதுவரை இருக்கிற நிலமை நீடிக்கட்டும் பின்னர் முடிவு செய்யலாம் எனச் சொல்லச் சொன்னார்

முதல்வர் புரட்சித் தலைவரின் கருத்தை அச் சங்க பிரதிநிதிகளிடம் தெரிவித்துள்ளேன்

முதல்வர் அழைத்துப் பேசும் வரை காத்திருப்பதாக அவர்கள் கூறியுள்ளனர்

இவ்வாறு அமைச்சர் ப. உ. ச கூறினார்

# டெல்லியில் தடை உத்தரவு: உஷார் நிலையில் ராணுவம்

புதுடெல்லி, ஜூலை 8. பஞ்சாப். அரியானாவில் பஸ்பயணிகள் படுகொலை செய்யப்பட்டதைத் தொடர்ந்து டெல்லியில் தடை உத்தரவு பிறப்பிக்கப் பட்டுள்ளது பல்வேறு முக்கிய பகுதிகளிலும் ராணுவம் உஷார் நிலையில் வைக்கப்பட்டுளளது,

பஞ்சாப் மற்றும் அரியானா பகுதிகளில் பஸ் பயணிகள் படுகொலை செய்யப் பட்டதைத் தொடர்ந்து டெல்லியிலும் பதட்டநிலை ஏற்பட்டது.

வன்முறை சம்பவங்கள் நடக்காமல்இருக்கடெல்லியின் பல்வேறு பகுதிகளிலும் பாதுகாப்பு நடவடிக்கைகள் தீவிரப்படுத்தப் பட்டுள்ளன.

போலீசாரும் பாதுகாப்புப்படையினரும் நகரம் முழுவதும் ரோந்து பணியில் ஈடுபட்டுள்ளனர்.

ராணுவ முகாம்கள முடுக்கி விடப்பட்டுள்ளன முக்கியப் பகுதிகளான காந்திநகர் திலக் நகர் சுபசாஜி முதலிய பகுதிகளில் ராணுவத்தினர் நிறுத்தப்பட்டுள்ளனர்,

வகுப்பு கலவரம் மூளாமல் இருக்கடெல்லி நகரம் முழுவதும் வரும் 6 நாட்களுக்கு தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. ஊர்வலம், பொதுக்கூட்டம், ஆர்ப்பாட்டம் முதலியவை தடை செய்யபட்டுள்ளன

போலீசார்பந்தோபஸ்து பணியில் தீவிரமாக ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்

பஞ்சாப் - அரியானா படுகொலையை கண்டித்து இன்று டெல்லி பஞ்சாபி பகுதியில்சிலர் ஆர்ப்பாட்டம் நடத்தினர். பயங்கரவாதிகளை கண்டித்து கோஷங்கள் எழுப்பப் பட்டன.

ஆர்ப் பாட்டக்காரர்களை போலீசார் தடுத்து நிறுத்தி அமைதி காத்தனர்,

ஜனாதிபதிதேர்தல்வரும் 13ம் தேதி நடைபெறவிருக்கிறது அதையொட்டி டெல்லி நகர் முழுவதும் பந்தோபஸ்து பணிகள் தீவிரப்படுத்தப் பட்டுள்ளன.

## ராணுவம் ரோந்து

சண்டிகா. ஜூலை 8. அரியானாவில் சில இடங்களில் ஏற்பட்ட கலவரங்களை அடுத்து ராணுவம ரோந்து வருகிறது.

இந்த பயங்கர சம்பவங்களைக்கண்டித்து பஞ்சாப் அரியானா. இமாசலபிரதேசம், சண்டிகர் ஆகிய மாநிலங்களில் இன்று பொது ஆத்தால் நடந்தது.

சில நகரங்களில் ராணுவத்தினர் ரோந்து வந்தனர்.

# போலீஸ்அதிகாரி வெட்டிக்கொலை

மதுரை ஜூலை 8. சிவகாசி அருகே சிவகாமிபுரத்தில் கோஷ்டி மோதலில் ஈடுபட்டவர்களை பிடிக்கச் சென்ற போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் வெட்டி கொல்லப்பட்டார்

சிவகாசி அருகே சிவகாமிபுரத்தில் மோதலில் ஈடுபட்ட இருகோஷ்டிகளைச் சேர்ந்தவர்களைப் பிடிப்பதற்காக சப்இன்ஸ்பெக்டர் தர்மராஜ், போலீசார் நாகராஜன் ஆகியோர் சென்றனா

பாக்கியம் என்பவரை சப் இன்ஸ்பெக்டர் பிடித்த போது பாக்கியம் தப்பி விட்டார் ஆனால் பாக்கியம் கோஷ்டியினர் சப்-இன்ஸ்பெக்டர்தர்மராஜை அரிவாளால் சரமாரியாக வெட்டினார்கள் அதே இடத்தில் சப் இன்ஸ்பெக்டர் தர்மராஜ் செத்தார்.

நாகராஜ் என்ற போலீசாருக்கும் பலத்த வெட்டு விழுந்தது. உடனடியாக மதுரைமருத்துவமனைக்கு நாகராஜ் கொண்டு வரப் பட்டார். மருத்துவ மனையில் மிகவும் கவலைக்கிடமான நிலையில் உள்ளார்,

## மதுரையில் விளையாட்டு வளாகம்

சென்னை ஜூலை. 8. மதுரை பல்கலைக்கழகம் விளையாட்டு வளாகம் ஒன்றை ரூபாய் 1 கோடி செலவில் கட்டவிருக்கிறது

இதற்கான அனுமதியை மத்திய அரசு விரைவில் கொடுக்க விருப்பதாக மதுரை பல்கலைக்கழக துணைவேந்தர் டாக்டர் எஸ் கிருஷ்ணமூர்த்தி நேற்று மதுரையில் நிருபர்களிடம் கூறினார்,

மேற்கு ஜெர்மனியில் நடைமுறை படுத்தப்பட்டு வரும் பல்வேறு விளையாட்டுத் திட்டங்கள் பற்றியும் அப்போது அவர் விளக்கினார்.

## வானொலியில் கலைமணி பேசுகிறார்

சென்னை, ஜூலை 8. சென்னை வானொலியில் நாளை (9-ந் தேதி) காலை 7-45 மணிக்கு மக்கள் மேடை நிகழ்ச்சியில் தமிழ்நாடு பால்வள இணையத் தலைவர் கலைமணி மக்களின் கேள்விகளுக்கு பதிலளிக்கிறார்.

## தலைமைக் கழக அறிவிப்பு

# இதயதெய்வம் புரட்சித்தலைவர்

## பிறந்தநாள் விழா மற்றும் புரட்சித்தலைவர்

தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக அடியெடுத்து வைப்பதையொட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு 10 ஆண்டுகளில் ஆற்றிய அரும் பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

### 11-7-1987 சனிக்கிழமை

பொள்ளாச்சி நகரம்
கோவை புறநகர் மாவட்டம்

சிறப்புரை

அமைச்சர்
திரு. ஆர் சவுந்தரராசன் பி காம் அவர்கள்

கவிஞர் நா. காமராசன் அவர்கள்
(துணைத்தலைவர் தமிழ்நாடு கதர்வாரியம்)

திரு. பொள்ளாச்சி வ. ஜெயராமன் அவர்கள்
(கோவை புறநகர் மாவட்ட கழகச் செயலாளர்)

திரு. இரா. அண்ணாநம்பி எம் பி அவர்கள்

திரு. பொள்ளாச்சி எம். வி. ரத்தினம் எம் எல் ஏ அவர்கள்

கூட்ட ஏற்பாடு
திரு. ஏ வெங்கடாசலம் அவர்கள்
பொள்ளாச்சி நகர கழகச்செயலாளர்

### 12-7-1987 ஞாயிற்றுக்கிழமை

சோமனூர்
சூலூர் ஒன்றியம்
கோவை புறநகர் மாவட்டம்

சிறப்புரை

அமைச்சர்
திரு ஆர் சவுந்தரராசன் பி காம் அவர்கள்

கவிஞர் நா காமராசன் அவர்கள்
துணைத்தலைவர் தமிழ்நாடு கதர்வாரியம்

திரு. பொள்ளாச்சி வ. ஜெயராமன் அவர்கள்
கோவை புறநகர் மாவட்ட கழகச் செயலாளர்

திரு. பி என் பரமசிவம் எம் எல் ஏ அவர்கள்

கூட்ட ஏற்பாடு
திரு செ ம வேலுசாமி பி ஏ டி காம் பி எல் அவர்கள்
(சூலூர் ஒன்றிய கழகச் செயலாளர்)

### புதுக்கோட்டை மாவட்டத்தில் 154 மீதாடா பொதுக்கூட்டங்கள்

கூட்டங்கள் அமைப்பு
திரு எஸ் ரகுபதி பி எஸ்ஸி அவர்கள்
புதுக்கோட்டை மாவட்ட கழகச் செயலாளர்

### 4-வது பட்டியலில் மாற்றம்

### 12 7 1987 ஞாயிற்றுக்கிழமை

கல்லாசிக்கோட்டை
புதுக்கோட்டை மாவட்டம்

சிறப்புரை
திரு பண்ணை சேதுராமன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு
திரு அப்துல் ரசாக அவர்கள்

### 12-7-1987 ஞாயிற்றுக்கிழமை

வாராப்பூர்
புதுக்கோட்டை மாவட்டம்

சிறப்புரை
நடிகர் திரு சி எல் ஆனந்தன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு
திரு வண்ணியானநதம் அவர்கள்

### 13 7 1987 திங்கட்கிழமை

தச்சங்குறிச்சி
புதுக்கோட்டை மாவட்டம்

சிறப்புரை
திரு பண்ணை சேதுராமன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு
திரு பிரான்சிஸ் அவர்கள்

### 13-7-1987 திங்கட்கிழமை

கிள்ளுகோட்டை
புதுக்கோட்டை மாவட்டம்

சிறப்புரை
நடிகர் திரு சி எல் ஆனந்தன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு
திரு அருளசாமி அவர்கள்
மாவட்ட பிரதிநிதி

### 19-7-1987 ஞாயிற்றுக்கிழமை

நெல்லிக்குப்பம் நகரம்
தென் ஆற்காடு மாவட்டம்

சிறப்புரை

திரு துரை அன்பரசன் அவர்கள்
நெல்லிக்குப்பம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர்
தென் ஆற்காடு மாவட்ட கழக துணை செயலாளர்

திரு. சி. குப்புசாமி பி இ, எம் பி ஏ அவர்கள்

திரு கே ஆர் ராமலிங்கம் பி ஏ பி எல் அவர்கள்
(தென் ஆற்காடு மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்)

கலை நிகழ்ச்சி
திரு ஈஸ்வரன் ஈஸ்வரி கலைக்குழுவினர்

கூட்ட ஏற்பாடு
திரு ஐ எம். ஜினா அவர்கள்
(நெல்லிக்குப்பம் நகர எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்)

### 20 7-1987 திங்கட்கிழமை

சாத்திப்பட்டு
அண்ணா கிராமம் ஒன்றியம்
நெல்லிக்குப்பம் தொகுதி
தென் ஆற்காடு மாவட்டம்

கலைநிகழ்ச்சி
துரை அன்பரசன் அவர்கள்
[நெல்லிக்குப்பம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர்]
தென் ஆற்காடு மாவட்ட கழக துணைசெயலாளர்

திரு கே ஆர் ராமலிங்கம் பி ஏ பி எல் அவர்கள்
(தென் ஆற்காடு மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்)

கலை நிகழ்ச்சி
திரு ஈஸ்வரன் ஈஸ்வரி கலைக் குழுவினர்

கூட்ட ஏற்பாடு
திரு சாத்திப்பட்டு கிளைக்கழக நிர்வாகிகள்
மற்றும்
அண்ணா கிராமம் ஒன்றிய
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

ஜெயலலிதா எம். பி.
சென்னை-14 கொள்கைபரப்புச் செயலாளர்
8 7-1987 அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

---

# ரூ. 60 லட்சம் மதிப்புள்ள போதைப் பொருள்: வாலிபர் கைது

சென்னை, ஜூலை 8. 60 லட்சம் ரூபாய் மதிப்புள்ள ஹிராயின் போதை பொருளை வைத்திருந்த இலங்கை வாலிபர் ஒருவரை போதை பொருள் தடுப்பு அதிகாரி சென்னையில் கைது செய்தார்.

சென்னை அசோக நகரில் ஒரு வாலிபர் மோட்டார் சைக்கிளில் வந்தபோது போதை பொருள் தடுப்பு போலீசார் அவரை மடக்கி சோதனை செய்தனர்.

### ரூ 60 லட்சம்

அப்போது அவர் மோட்டார் சைக்கிளில் ரூபாய் 60 லட்சம் மதிப்புள்ள ஹிராயின் என்ற போதை பொருளை மறைத்துவைத்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

விசாரணையில் அவர் பெயர் தர்மபாலன் வயது 24 என்றும், அவர் இலங்கையைச் சேர்ந்தவர் என்றும் தெரியவந்தது.

போதைப் பொருள் தடுப்பு போலீஸ் ஐ ஜி ராஜசேகரன் நாயர் உத்தரவின் பேரில் இன்ஸ்பெக்டர் லட்சுமிநாதன் தர்மபாலனை கைது செய்து அவனிடமிருந்த ரூபாய் 60 லட்சம் மதிப்புள்ள ஹிராயின் பவுடரை பறிமுதல் செய்தார்.

## பதுக்கி வைத்திருந்த சந்தன கட்டை பறிமுதல்

பாலக்காடு ஜூலை 8. கேரள மாநிலம் பாலக்காடு மாவட்டத்தில் அட்டப்பாடி என்ற இடத்தில் இரண்டு வீடுகளில் பதுக்கி வைக்கப்பட்டிருந்த 50 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள 750 கிலோ சந்தன கட்டையை போலீசார் கைப்பற்றினர். இந்த சந்தனக் கட்டைகள் தமிழக எல்லைப் பகுதியிலிருந்து கடத்தி வரப்பட்டதாக தெரிகிறது. இது தொடர்பாக ... போலீசார் கைது செய்துள்ளனர்.

---



# கருணாநிதியின் "திடீர்" போராட்ட மர்மம் என்ன? திருநாவுக்கரசு விளக்கம்

சென்னை ஜூலை 8. திமுகவினர் பலர் புரட்சித்தலைவரின் தலைமையேற்று கழகத்தில் இணைந்து வருகின்றனர். மீதியிருக்கும் தொண்டர்களை ஏமாற்றி தனது கட்சியில் வைத்துக் கொள்ளவே கருணாநிதி ஏதாவது போராட்டங்களை அறிவிக்கிறார் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

தென் சென்னை மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணி சார்பில் முதல்வர் புரட்சித்தலைவர் பிறந்தநாள் விழா மற்றும் கழக அரசின் சாதனை விளக்கப் பொதுக்கூட்டம் லாயிட்ஸ் சாலையில் நடைபெற்றது. மாநாடு போல் நடைபெற்ற இந்த கூட்டத்திற்கு தென் சென்னை மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர் ராஜேந்திரன் தலைமை வகித்தார். நிகழ்ச்சியில் வாரியத் தலைவர்கள் ... அங்கமுத்து, தலைமைக் கழக பேச்சாளர் போளூர் சோவிந்தன், சட்டமன்ற உறுப்பினர் ... மதி, தொகுதி கழக செயலாளர்கள் ஜெ... பாலன், எம். கே. பாலன், தயா... பகுதி எம் ஜி ஆர் இளைஞர் அணி செயலாளர் பாண்டியன், சைதை சாரங்கன் ஆகியோர் பங்கேற்று பேசினார்.

இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டு அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது:

தமிழ் மக்களின் காவல் தெய்வமாக விளங்கும் முதல்வர் புரட்சித்தலைவர் நல்ல உடல் நலத்துடன் இருக்கிறார் என்ற மகிழ்ச்சியான செய்தியை நீங்கள் எல்லாம் அறிவீர்கள். அதை மீண்டும் ... ஆசைப்படுகிறேன்.

### கோப்புகளை பார்க்கிறார்

முதல்வர் புரட்சித் தலைவர் நல்ல உடல் நலத்துடன் இருக்கிறார். அமைச்சர்களுக்கும் அதிகாரிகளுக்கும் உத்தரவிடுகிறார். கோப்புகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

ஒருபத்து தினங்களுக்கு முன் முதல்வர் புரட்சித் தலைவர் உடல் அசதியால் ஒன்றிரண்டு நாள் ஓய்வு எடுத்தார். உடனே திமுகவினர் வழக்கம் போல் புரட்சித்தலைவர் உடல் நிலை குறித்து கட்டுக் கதைகளை அவிழ்த்து விட்டு விமர்சனம் செய்ய ஆரம்பித்தனர். 1984 தேர்தல் நேரத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நிலை குறித்து அற்பத்தனமான விமர்சனங்களைச் செய்தனர். அதுபோல் இப்போது ஆரம்பித்திருக்கிறார்கள்.

கோவையில் நடிகர் சத்யராஜ் சகோதரியின் திருமணத்தில் பங்கேற்க அந்த மாலை நேரத்திலேயே எழுந்து சென்றது பிரதமர் ராஜீவ் அழைப்பிற்கேற்ப உடனே டெல்லி சென்றது அங்கு சென்றபின் இலங்கை தமிழர்களுக்கு உணவு மற்றும் மருந்து பொருட்கள் அனுப்ப அமைச்சர்கள் அதிகாரிகளை இடைவிடாமல் சந்தித்தது இப்படி ஓய்வின்றி தொடர்ந்து பணியாற்றியதால் புரட்சித் தலைவருக்கு சற்று அசதி ஏற்பட்டது. இப்போது புரட்சித்தலைவர் நலமாக இருக்கிறார்.

### சட்டமன்ற பேச்சு

புரட்சித்தலைவர் என்ன நினைக்கிறார். அவர் மனதில் என்ன இருக்கிறது என்று யாராலும் கண்டுபிடிக்க முடியாது. இந்த நேரத்தில் கருணாநிதி எதிர்கட்சித் தலைவராக சட்டமன்றத்தில் இருந்தபோது முதல்வர் புரட்சித்தலைவர் சட்டமன்றத்தில் பேசியது நினைவுக்கு வருகிறது. நீங்கள் கருணாநிதி ஒரு கதை எழுதக் கொடுத்தால் ... எப்படி ... எப்படி முடியும் என்று இந்த ராமச்சந்திரனால் சொல்ல முடியும் ஆனால் இந்த ராமச்சந்திரன் ஒரு கதை எழுதினால் எப்படிப் போய் எப்படி முடியும் என்பதை ஓராயிரம் கருணாநிதி சேர்ந்தாலும் கூற முடியாது என்றார். இன்று அதுதான் நடக்கிறது.

புரட்சித்தலைவர் அமெரிக்காவுக்கு உடனடியாக செல்வது நலம் என்று நாங்கள் விரும்பினோம். புரட்சித் தலைவர் மீதுள்ள அன்பால் பிரதமர் ராஜீவ் உடனே விமானம் ஏற்பாடு செய்தார்.

இந்த நேரத்தில் புரட்சித் தலைவர் மீதுள்ள அன்பால் பிரதமர் ராஜீவே நேரடியாக சென்னைக்கு வருவதாக தெரிவித்தார். இனியும் தாமதிக்க முடியாது என்று புரட்சித்தலைவரிடம் இதைத் தெரிவித்தோம். உடனே புரட்சித் தலைவர் 'எனக்கு ஜலதோஷம் பிடித்து சற்று அசதியாக இருக்கிறது. உங்களுக்கெல்லாம் ஜலதோஷம் பிடிப்பதில்லையா? ஜலதோஷம் பிடித்தால் உடனே அமெரிக்காவிற்கா செல்லுவீர்கள் என்று கேட்டார். பிரதமருக்கு நிறைய வேலைகள் இருக்கிறது நான் நலமாக இருக்கிறேன் எனவே அவரை வரவேண்டாம் என்று கூறுங்கள் என்றார். அதற்குப் பிறகு ராஜீவுக்கு தகவல் தெரிவிக்கப்பட்டது.

### எங்கள் விருப்பம்

புரட்சித்தலைவர் நீண்டகாலம் வாழவேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். எங்கள் ஆயுளைக் குறைத்துக் கொண்டு புரட்சித்தலைவர் அதைப் பெற்று நீடுழி வாழவேண்டுமென்று என்போன்ற லட்சக்கணக்கான இளைஞர்கள் விரும்புகிறார்கள். புரட்சித் தலைவர் இந்தியாவின் பொக்கிஷம்.

புரட்சித் தலைவரை டெல்லியிலிருந்து பிரதமர் ராஜீவ் தனிவிமானத்தில் அனுப்பிவைத்தார். உடனே கருணாநிதி எம் ஜி ஆர் தனிவிமானத்தில் வருவதாம் என்று கேட்கிறார். இது போல் எல்லா முதல்வருக்கும் கிடைக்குமா என்று கேட்கிறார். புரட்சித்தலைவர் மீதுள்ள அன்பால் பிரதமர் ராஜீவ் தனி விமானம் ஏற்பாடு செய்து தருகிறார். இதைக் கண்டு கருணாநிதி பெருமைபட வேண்டாமா?

### மக்கள் அன்பு

தமிழகத்தின் நிரந்தர முதல்வர் புரட்சித்தலைவர் தான். புரட்சித்தலைவர் எங்கு சென்றாலும் லட்சோப லட்சம் மக்கள் கூடுகின்றனர். அந்த அளவிற்கு தமிழக மக்கள் புரட்சித்தலைவர் மீது அன்பு வைத்திருக்கிறார்கள்.

இதற்கு காரணம் மக்கள் நலம்பேணும் ஒப்பற்ற தலைவராக புரட்சித் தலைவர் விளங்குகிறார். கடுமையான வறட்சி நிலவும் இந்த நேரத்திலும் அரிசி விலை உயரவில்லை. கருணாநிதி ஆட்சிக் காலத்திலும் வறட்சி வந்தது. இப்போது உள்ளது போன்ற கடுமையான வறட்சி அல்ல. சில இடங்களில் வறட்சி பாதித்தது. தஞ்சையிலிருந்து வேறு மாநிலங்களுக்கு அரிசி கொண்டு போக தடை ... உணவு அமைச்சருக்கே தெரியாமல் அந்த தடையை நீக்கி செயற்கை பஞ்சத்தை உருவாக்கியவர் கருணாநிதி.

### கருணாநிதி திட்டம்

கருணாநிதி தன் ஆட்சிக் காலத்தில் இரண்டு வகையான திட்டங்களைப் போட்டார். ஒன்று விளம்பரத்திற்கு மற்றொன்று பணம் சம்பாதிக்க. விளம்பரத்திற்காக மூக்கு கண்ணாடி வழங்குவது ... பேருக்கு ... கொடுத்து விளம்பரம் செய்தார்கள். பணம் சம்பாதிக்க வீராணம் போன்ற திட்டங்களைப் போட்டார். இப்போது எந்த கட்சி ஆண்ட போதும் அவரது வசூல் வேட்டை நிற்கவில்லை. தமிழகத்தில் வறட்சி நிலவுவதாக கூறும் கருணாநிதி இந்த வறட்சி காலத்திலும் லட்சம் லட்சமாக வசூலிக்கிறார். இந்தப் பணம் எனக்கல்ல நான் ஒன்றிரண்டு படங்களுக்கு வசனம் எழுதி லட்சம் லட்சமாக வாங்கிக் கொள்வேன் என்றும் கூறி இருக்கிறார்.

கருணாநிதி வசனம் எழுதி எத்தனை படங்கள் ஓடுகிறது. இப்போது அவரை யாரும் வசனம் எழுத கூப்பிடுவதில்லை. நிதி வசூலிக்கும் பணமெல்லாம் கட்சி கஜானாவுக்கு செல்வதாக கருணாநிதி கூறி இருக்கிறார்.

### தி மு க கஜானா மர்மம்

திமுக கஜானா யாரிடம் இருக்கிறது. கருணாநிதியின் மகன், மருமகனிடம் இருக்கிறது. திமுக சொத்துக்கள் கருணாநிதியின் குடும்ப சொத்தாக இருக்கிறது.

திமுகவுக்கு தரும் நிதி கருணாநிதி குடும்பத்துக்கு தரும் நிதி. கருணாநிதி மனச்சாட்சி உடையவராக இருந்தால் இப்படி வறட்சி நேரத்திலும் தமிழக மக்களை வாட்டி வதைத்து நிதி வசூலிக்கலாமா?

யாழ்ப்பாண தமிழர்களுக்கு உணவு அனுப்பினால் உணவுப் பொட்டலம் எதற்கு ஆயுதம் அல்லவா போடவேண்டும் என்கிறார் கருணாநிதி. கருணாநிதியின் எண்ணமெல்லாம் ஏதாவது ஒரு பிரச்சினை அவருக்கு அரசியல் நடத்த இருக்க வேண்டும். கருணாநிதி உண்மையிலேயே ஈழத் தமிழர்கள் மீது அக்கறை உள்ளவராக இருந்தால் பிரதமருக்கு நன்றி தெரிவித்திருக்க வேண்டாமா.

### புதிய போராட்டம்

கருணாநிதி இப்போது புதிய போராட்டத்தை அறிவித்திருக்கிறார். அவர் கூட்டங்களுக்கு காவலர் வரவில்லையாம். எனவே கவர்னர் அலுவலகம் முன் போராட்டம் நடக்கும் என்கிறார் கருணாநிதி. அவர் பாதுகாப்புக்கு போலீஸ் அதிகாரியை அனுப்ப நாங்கள் தயார். ஏற்றுக்கொள்ள அவர் தயாரா? கருணாநிதியின் எந்தப் போராட்டமும் மக்களுக்கு பயனளிக்கக் கூடியதல்ல.

ஜனாதிபதி தேர்தலில் தமிழகத்தைச் சேர்ந்த வெங்கட்ராமன் போட்டியிடுகிறார். தமிழகத்தை சேர்ந்தவர் ஜனாதிபதியாக வருவது தமிழனுக்கு கிடைத்த வாய்ப்பு.

கருணாநிதி உண்மையான தமிழராக இருந்திருந்தால் ஆர். வி.யை அல்லவா ஆதரிக்க வேண்டும். ஆர். வி. முற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர் என்பதால் அவரை ஆதரிக்கவில்லை என்கிறார். எதிர்க்கட்சி வேட்பாளர் கிருஷ்ணய்யர் எந்த சமுதாயத்தை சேர்ந்தவர். கருணாநிதியின் ஒரே குறிக்கோள் புரட்சித் தலைவரை எதிர்ப்பதுதான் அதற்காக எதையும் செய்வார். அதைத் தவிர அவருக்கு வேறு லட்சியம் எதுவும் இல்லை. புரட்சித் தலைவரின் ஆட்சிக்கு இடையூறு செய்து கொண்டிருப்பது தான் கருணாநிதியின் ஒரே லட்சியம்.

கருணாநிதியின் இந்தப் போக்கை அறிந்து அந்தக் கட்சியிலுள்ள உண்மையான தொண்டர்கள் புரட்சித் தலைவர் தலைமையேற்று கழகத்தில் இணைந்து வருகின்றனர். மீதியிருக்கும் தொண்டர்களை தக்க வைக்கவே அவ்வப்போது ஏதாவது போராட்டங்களை அறிவிக்கிறார்.

புரட்சித் தலைவரின் சாதனைகளை வெளி மாநிலத்தவர் மட்டுமல்ல உலக அமைப்புகளே வியந்து பாராட்டுகின்றன. கருணாநிதி மட்டும் சுய நலத்துக்காக எதிர்க்கிறார். கருணாநிதியின் போராட்ட அறிவிப்புகள் ... களாக புரட்சித்தலைவரின் காலில் விழுகிறது. புரட்சித் தலைவரை ஒரு கருணாநிதியால் மட்டுமல்ல ஓராயிரம் கருணாநிதி வந்தாலும் ஒன்றும் செய்து விட முடியாது.

தமிழ் மக்களின் நலன் காக்கும் ஒப்பற்ற தலைவராக விளங்கும் புரட்சித்தலைவர் காலத்தில் நாமும் வாழ்வதே நமக்கு பெருமை. மக்கள் இயக்கமாக கழகம் தொடர்ந்து செயல்படும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.

மாநாடு போல் நடைபெற்ற இந்தக்கூட்டத்திற்கு தென் சென்னை மாவட்ட இளைஞர் அணிச் செயலாளர் ராஜேந்திரன் தலைமை வகித்தார். அவரது தலைமையில் பணியாற்றிய இளைஞர் அணியினர் அந்தப் பகுதியை இரட்டை இலை வண்ண மின் விளக்கு அலங்காரத்தால் எழிலுறச் செய்திருந்தனர்.

இறுதியில் மதுரை ஈஸ்வரன் ஈஸ்வரி குழுவினரின் கலை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

---

## சட்டமன்ற கழக உறுப்பினர்கள் கூட்டம்

பேரன்புடையீர்,

மாண்புமிகு தமிழக முதல்வர்
இதய தெய்வம் டாக்டர்
**புரட்சித்தலைவர்** அவர்கள்

தலைமையில் சட்டமன்ற கழக உறுப்பினர்கள் கூட்டம் 11 7 87 சனிக்கிழமை அன்று காலை 10 மணிக்கு தலைமைக் கழகத்தில் நடைபெற இருக்கிறது. கூட்டத்தில் சட்டமன்ற கழக உறுப்பினர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ள அன்புடன் வேண்டுகிறேன்.

இவ் அறிவிப்பு இதய தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் அனுமதியுடன் வெளியிடப்படுகிறது.

துரை. கோவிந்தராசன்
அரசு தலைமை கொறடா

சென்னை
8 7 87

# குருவியை சுடுவதுபோல் 78பேர் படுகொலை

# பஞ்சாப்-அரியானாவில் பதட்ட நிலை நீடிப்பு

சண்டிகர், ஜூலை 8- அரியானா மாநிலத்தில் நேற்று இரவு பயங்கரவாதிகள் மீண்டும் 2 பஸ்களை வழி மறித்து 36 பேர்களை சுட்டுக் கொன்றார்கள் இந்த சம்பவம் நாடு முழுவதும் பதட்ட நிலையை ஏற்படுத்தியுள்ளது இதைத் தொடர்ந்து அண்டை மாநிலங்களில் ராணுவம் உஷார் படுத்தப்பட்டுள்ளது.

கடந்த திங்கட்கிழமை அன்று அரியானாவில் இருந்து ரிஷிகேஷ் கோவிலுக்கு சென்று கொண்டிருந்த பஸ் ஒன்றை நிறுத்தி 40 பயணிகளை விருகத்தனமாக சுட்டுக்கொன்றார்கள் பஸ் பயணிகள் அனைவரும் யாத்ரீகர்கள்.

அரசுக்குச் சொந்தமான அந்த பஸ் சென்று கொண்டிருந்த போது அதைத்தொடர்ந்து கார் வந்த 5 பயங்கரவாதிகள் பஸ்ஸை நிறுத்தி இந்தப்படுகொலையில் ஈடுபட்டனர் கொல்லப்பட்டவர்களில் 4 குழந்தைகள் உள்பட 5 பேர் பெண்கள்.

இந்த பயங்கர படுகொலை பற்றி நாடு முழுவதும் அதிர்ச்சி அடைந்திருக்க நேற்று இரவு மீண்டும் அரியானா மாநிலத்தில் மேலும் 2 பஸ்களை பயங்கரவாதிகள் வழிமறித்து அதில் இருந்த 36 பயணிகளை சுட்டுக் கொன்றார்கள்.

இந்தகொடூரமான சம்பவம் நேற்று இரவு அரியானா மாநிலம் ஹிஸ்சார் மாவட்டத்தில் நடந்தது இஸ்சார் நகரத்தில் இருந்து சிராஸ்பூருக்கு அந்த பஸ் சென்று கொண்டிருந்தது அதைத் தொடர்ந்து ஒரு ஜீப் வண்டியிலும் மற்றொரு காரிலும் 5 பயங்கரவாதிகள் சென்றார்கள்

அந்த பஸ்ஸை பயங்கரவாதிகள் நிறுத்தி 4பேரை சுட்டுக்கொன்றனர்

அப்போது வேறொரு பஸ் எதிர்பக்கத்தில் வந்து கொண்டிருந்தது அந்த பஸ்ஸையும் பயங்கரவாதிகள் நிறுத்தினார்கள்

இரண்டாவது பஸ்ஸை நிறுத்தியபயங்கரவாதிகள் அந்த பஸ்ஸில் பயணம் செய்த 32 பேர்களை கண் மூடித்தனமாக சுட்டுக் கொன்றார்கள். 30 பேர் இதில்படுகாயம் அடைந்தனர் இரண்டாவது பஸ்பிரோஸ்பூரில் இருந்து டெல்லிக்கு சென்று கொண்டிருந்ததாகக் கூறப்படுகிறது.

இரண்டு பஸ்களும் அரியானா அரசுக்குச் சொந்தமானவை.

2 பஸ்களில் பயணம் செய்தவர்களில் 36 பேர் படுகொலை செய்யப்பட்டதாக போலீசார் தெரிவித்தனர்.

பயங்கரபடுகொலையை நடத்திய பயங்கரவாதிகள் 5பேரும் அவர்கள்வந்த 2 வாகனங்களையும் விட்டு விட்டு வேறொரு டிரக்கில் ஏறிதப்பி ஓடிவிட்டனர்

அவர்கள் பஞ்சாபை நோக்கி சென்றதாகக் கூறப்படுகிறது

கடந்த திங்கட்கிழமை இரவு ரிஷிகேஷுக்கும் சென்ற பஸ்ஸை நிறுத்தி40 பயணிகளை கொலை செய்த பயங்கரவாதிகள் தான் இந்த படுகொலையையும் நடத்தியிருப்பார்கள் என்று பஞ்சாப் போலீசார் தெரிவித்தனர்

இரண்டு பஸ்களிலும் பயணம் செய்தவர்கள் அனைவரும் இந்து மதத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் கூறப்படுகிறது

பஞ்சாபில் உள்ள பயங்கரவாதிகள் அண்டை மாநிலமான அரியானாவுக்கு வந்து இப்படி பஸ் பயணிகளை சுட்டுக் கொன்றிருக்கிறார்கள் மூத்த போலீஸ் அதிகாரிகள் சம்பவம் நடந்த இடத்துக்கு விரைந்துள்ளனர்.

ஏற்கனவே பாட்டியாலா அருகேபயணிகளைசுட்டுக் கொன்ற சம்பவம் நடந்த 24 மணி நேரத்திற்குள் இந்த கொடிய சம்பவம் மீண்டும் நடந்துள்ளது இதில் 36 பேர்களை படு பயங்கரவாதிகள் சுட்டுக் கொன்றார்கள்,

ஆக 36 மணி நேரத்தில் 76 பயணிகள் உயிரிழந்தனர்

இந்தபயங்கர சம்பவத்தைத் தொடர்ந்து அரியானா பஞ்சாப் மாநிலங்களை யொட்டியிருக்கும் அண்டை மாநிலங்களான டெல்லிஇமாசலபிரதேசம் ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் ராணுவம்உஷார் படுத்தப்பட்டுள்ளது

பயங்கரவாதிகள் மீதுகடும் நடவடிக்கை எடுக்குமாறு அரியானா மாநில முதல் அமைச்சர் தேவிலாலை மத்திய உள்துறை அமைச்சர் பூட்டாசிங் கேட்டுக் கொண்டுள்ளார்.

பயங்கரவாதிகளை ஒழித்துக்கட்டுவதில் மத்திய அரசு அனைத்து உதவிகளையும் செய்யும் என்றும் அவர் கூறினார்.

பஸ் பயணிகளை சுட்டுக் கொலை செய்த பயங்கரவாதிகள் அனைவரும் "காலிஸ்தான்" அதிரடிப் படையை சேர்ந்தவர்கள் என்ற தகவல் போலீசாருக்கு கிடைத்துள்ளது.

"காலிஸ்தான்" வாசகங்கள் அச்சடிக்கப்பட்ட காகிதங்களை கொலையாளிகள் விட்டுச் சென்றிருப்பதாக பஞ்சாப் போலீஸ்டைரக்டர் ஜெனரல் ரிபைரோ கூறினார்

கடந்த திங்கட்கிழமை நடந்த படுகொலையில் ஒரு பயங்கரவாதியும் உயிரிழந்துள்ளார் அவனது சட்டைப் பாக்கெட்டில இருந்த சில கடிதங்கள் மூலம் அவன் பெயர் குர்மிட் சிங்என்றழைக்கப்படும் டோனி என்று தெரிய வந்துள்ளது.

இவன் பல கொலை கொள்ளை சம்பவங்களில் ஈடுபட்டவன் அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ரூபாய் 1 லட்சம் பரிசுவழங்கப்படும் என்றுப் பஞ்சாப் அரசு அறிவித்திருந்தது

பயங்கரவாதிகள்விட்டுச் சென்ற கடிதத்தில் மத்திய அரசையும் போலீஸ் டைரக்டர் ஜெனரல் ரிபைரோவையும் கண்டனம் செய்த வாசகங்கள் எழுதப்பட்டிருந்தன

"சீக்கிய இளைஞர்கள் கொல்லப்படுகிறார்கள் ரிபைரோவும் மத்தியஅரசும் சீக்கிய இளைஞர்களை கொன்று வருகிறார்கள்

அதற்கு பதிலாகத்தான் நாங்கள் இந்துக்களை சுட்டுக் கொல்கிறோம் ஒரு சீக்கியர் கொல்லப்பட்டால் அதற்கு ஈடாக 100 இந்துக்களை கொல்வோம் என்று எழுதப்பட்டுள்ளது

இத்தகவலை போலீஸ் டைரக்டர் ஜெனரல் கூறினார்.

பஞ்சாப் கவர்னர் எஸ். எஸ். ரே போலீஸ் டைரக்டர் ஜெனரல் ரிபைரோ மற்றும்அதிகாரிகள் சம்பவம் நடந்த இடத்துக்கு விரைந்து சென்றனர்,

படுகாயம் அடைந்து மருத்துவமனையில் உள்ளவர்களை அரியானா கவர்னர் பானி, முதல்வர் தேவிலால் ஆகியோர் சென்று பார்த்தனர்.

உயிரிழந்தவர்களின் குடும்பங்களுக்கு தலா ரூபாய் 20 ஆயிரமும் படுகாயம் அடைந்தவர்களுக்கு தலா 10 ஆயிரமும் சதாரண காயம் அடைந்தவர்களுக்கு ரூபாய் 5ஆயிரமும் கொடுக்க அரியானா முதல்வர் தேவிலால் அறிவித்தார்

## ராஜீவ் அவசர ஆலோசனை

பஸ் பயணிகள் படுகொலை செய்யப்பட்ட சம்பவத்தைதொடர்ந்து பிரதமர் ராஜீவ்காந்தி சக மந்திரிகளுடன் ஆலோசனை நடத்தினார் பஞ்சாப் அரியானா மாநிலங்கள இணைந்து தீவிர நடவடிக்கை எடுக்க முடிவு செய்துள்ளன

பஸ்பயணிகள்படுகொலை செய்யப்பட்ட சம்பவம் நாட்டின் பல்வேறு பகுதிகளையும் உலுக்கி விட்டது.

அமைச்சர்கள் அதிகாரிகள்பொதுமக்கள் பலரும் அதிர்ச்சி அடைந்துள்ளனர்

பாட்டியாலாவில் நடந்த படுகொலை சம்பவத்தை நேரில் கண்டறிய மத்திய அமைச்சர் பூட்டாசிங் விரைந்து சென்றார்.

அரியானா. ராஜஸ்தான் இமாசலபிரதேசம் உத்தர பிரதேசம் ஆகிய மாநிலங்களின் முதல் அமைச்சர்களுடனும் அவர் தொடர்பு கொண்டு பேசினார்,

பயங்கரவாதிகள் மீது கடும் நடவடிக்கை எடுத்து பொதுமக்களுக்கான பாதுகாப்பு நடவடிக்கைகளை தீவிரப் படுத்த வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்

நேற்று புதுடெல்லியில் அரசியல் விவகாரம் பற்றிய மத்திய அமைச்சரவைக் கூட்டம் பிரதமர் ராஜீவ் தலைமையில் நடைபெற்றது பஸ்பயணிகள்கொலை செய்யப்பட்ட சம்பவம் பற்றி ஆலோசிக்கப்பட்டன

படுகொலை சம்பவம் பற்றிய விவரங்களை மத்திய அமைச்சர் பூட்டா சிங் அப்போது தெரிவித்தார்

பயங்கரவாதிகளை அடியோடு ஒழித்துக்கட்டுவதில பஞ்சாபும் அரியானாவும் இணைந்து நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் என்று கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது

பஸ்பயணிகள்படுகொலை செய்யப்பட்ட செய்தி அறிந்து நாடு முழுவதும் அனைத்து கட்சித் தலைவர்களும் கடும்கண்டனம் செய்துள்ளனர் பயணிகள் கொல்லப்பட்டதற்கு கண்டனம் தெரிவித்து பஞ்சாப், அரியானா டெல்லி சண்டிகர் ஆகிய மாநிலங்களில் "பந்த்" அனுஷ்டிக்கப்படுகிறது.

## அலெக்சாண்டர் கவர்னர் ஆகிறார்

லண்டன் ஜூலை 8- இங்கிலாந்து தூதராக இருக்கும் டாக்டர் பி, சி. அலெக்சாண்டர் ஜம்மு காஷ்மீர் மாநில கவர்னராக நியமிக்கப்பட இருப்பதாக தெரிகிறது

ஆப்கானிஸ்தான் தூதராக இருக்கும் எஸ் கே சிங் இங்கிலாந்து தூதராக நியமிக்கப்பட இருக்கிறார்



## சுலோசனா சம்பத் பதவிகாலம் நீடிப்பு

சென்னை, ஜூலை 8- தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக்கழக['டிட்கோ'] தலைவர் சுலோசனா சம்பத்தின்பதவிகாலம்மேலும் 3ஆண்டுகளுக்கு நீடிக்கப் பட்டுள்ளது.

1985ம் ஆண்டு முதல் தொடர்ந்து இப் பொறுப்பை சுலோசனா சம்பத் வகித்து வருகிறார்.

இது தொடர்பாக அவர் மற்ற நிறுவனங்களில் வகித்து வந்த பதவியும் நீடிக்கப்படுகிறது.

## காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் ஆலோசனை கூட்டம்

சென்னை, ஜூலை 8 தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் எம் எல் ஏக்கள் ஆலோசனைக் கூட்டம் 10 ந்தேதி மாலை 4 35 மணிக்கு சென்னை சட்டசபை காங்கிரஸ் கட்சி அலுவலகத்தில் நடைபெறுகிறது.

இந்தக் கூட்டத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பிரதிநிதிகளாக மத்திய அமைச்சர்கள். பூட்டாசிங். எம். எம் ஜேக்கப் ஆகியோர் கலந்து கொள்கிறார்கள் என தமிழ்நாடு காங்கிரஸ் கட்சித்தலைவர் எம். பழனியாண்டி. தெரிவித்துள்ளார்.

# வங்கிக்கொள்ளை: குற்றவாளிகளை பிடிக்க போலீசார் தீவிரம்

சென்னை, ஜூலை 8- சென்னை மறைமலை நகரில் உள்ள இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் துப்பாக்கியால் மிரட்டி ரூபாய் 50 ஆயிரம் கொள்ளை அடிக்கப்பட்டது கொள்ளையர்கள் விரைவில்பிடிபடுவர் என ஐ ஜி ஸ்ரீ பால் கூறினார்.

கொள்ளை நடந்தமறைமலை நகருக்குச் சென்று வங்கியை ஸ்ரீபால்பார்வையிட்டார்

சென்னையிலிருந்து 25கிலோ மீட்டர் தொலைவில் மறைமலைநகர் உள்ளது

நேற்று பகல் 2மணி அளவில் 5பேர் கொண்ட கொள்ளை கும்பல் வங்கிக்குள் நுழைந்தது

வங்கியில் உள்ள ஊழியர்களை எந்திரத் துப்பாக்கியைக் காட்டிமிரட்டி அங்கிருந்த ரூபாய் 50 ஆயிரத்தை கொள்ளை அடித்தனர்

பின்னர் அங்கிருந்து காரில் ஏறி தப்பிவிட்டனர்

பின்னர் வங்கி ஊழியர்கள் போலீசுக்கு தகவல் தெரிவித்தனர்

கொள்ளை நடந்த இடத்திற்கு உடனடியாக சென்னையில் இருந்து போலீஸ் துப்பறியும் நாய்களான. ராஜா, சிமா, ஆகியவை கொண்டுவரப்பட்டன கைரேகை நிபுணர்களும் வரவழைக்கப் பட்டனர் கைரேகைகள் பதிவு செய்யப்பட்டன

## வங்கி கொள்ளை ஸ்ரீபால் பேட்டி

கொள்ளை நடந்தது சம்பந்தமாக ஐ.ஜி ஸ்ரீபால் கூறியதாவது

வங்கி ஊழியர்கள் கொள்ளைக்காரர்கள் 2பேரைத் தான் பார்த்து இருக்கிறார்கள் வெளியில் எத்தனை பேர் நின்றார்கள். அவர்கள் எதில் வந்தார்கள், எப்படி தப்பினார்கள் என்று அவர்களுக்குச் சரியாகத் தெரியவில்லை

கொள்ளைக்காரர்களில் 2 பேர் துப்பாக்கியும் ஒருவன் இயந்திர துப்பாக்கியும் வைத்து இருந்திருக்கிறார்கள்.

அவர்கள் தமிழில் மட்டுமே பேசிஇருக்கிறார்கள் அதுவும்சிறுசிறுவார்த்தைகளை மட்டும் உபயோகப் படுத்தி இருக்கிறார்கள்.

## தனிப் போலீஸ் படை

துப்பாக்கி முனையில் அனைவரையும் மிரட்டிய அவர்கள் பண பெட்டியை திறக்கச்செய்து பணத்தை கொள்ளை அடித்துச் சென்றனர்

எவ்வளவுபணம்கொள்ளை போனது என்று சரியாக தெரியவில்லை.

கொள்ளைக் காரர்கள் மொத்தம் 10நிமிடங்கள் தான் பாங்கியில் இருந்து இருக்கிறார்கள்

அவர்கள் அனைவரும் பேண்டும் சட்டையும் அணிந்து இருந்தனர்.

கொள்ளைகாரர்களுக்கு பல இடங்களில் "வலை" விரிக்கப்பட்டுள்ளது. விரைவில் பிடித்து விடுவோம் பல இடங்களுக்கு போலீசார் அனுப்பப்பட்டு கொள்ளைக்காரர்களை தேடி வருகிறார்கள்.

கொள்ளையர்களை பிடிக்க தனி போலீஸ் படை அமைக்கப்பட்டுள்ளது.

கூடுதல் போலீஸ் சூப்பிரண்டமணி தலைமையில் தனி போலீஸ்படை அமைக்கப்பட்டுள்ளது

மேற்கண்டவாறு ஐ.ஜி. ஸ்ரீபால் கூறினார். கொள்ளை நடந்த இடத்தை தமிழ்நாடு போலீஸ் டைரக்டர் ஜெனரல் கே. ரவீந்திரன் ஐ ஜி கே. ராஜசேகரன் நாயர் ஆகியோரும் பார்வையிட்டனர்

## எல்லை காந்தி உடல்நிலை தொடர்ந்து கவலைக்கிடம்

புதுடெல்லி ஜூலை 8- டெல்லி மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் எல்லை காந்தியின் உடல்நிலை மேலும் கவலைக்கிடமான நிலையில் உள்ளது

நேற்று அவருக்கு மூச்சுத் திணறல் ஏற்பட்டது இதனால் அவரது உடல் நிலை மிகவும் மோசமான நிலையை அடைந்தது.

பிரதமர் ராஜீவ்காந்தி மருத்துவமனைக்கு சென்று எல்லைகாந்தியை பார்த்தார்.

மத்திய அமைச்சர்கள் பிவி நரசிம்மராவ் சரோஜ் காபர்டே மற்றும் பாராளுமன்றசபாநாயகர் பல்ராம் ஜாக்கர் ஆகியோரும் மருத்துவமனைக்கு சென்று எல்லைகாந்தியை பார்த்தனர்

## ரோட்டரி கிளப் தலைவராக ராமகிருஷ்ணன் தேர்வு

சென்னை, ஜூலை 8- முன்னாள் நாடாளுமன்ற கழக உறுப்பினர் ராமகிருஷ்ணன் சென்னை (மெயின்) ரோட்டரி கிளப் தலைவராகத்தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.













## போக்குவரத்துதுறை

அரசாணை [நிலை] எண் 1214
நாள்: 6-7-87

நிலம் கையகப் படுத்துதல் சட்டத்தின் 6ஆம் பிரிவின் கீழான விளம்பல்

## அறிவிக்கை

கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப் பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காகக் கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மன நிறைவடைந்திருப்பதோடு, அந்நிலங்களுக்கு வழங்கப்படவேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப் பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 1894ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் 1-1894) 6ம் பிரிவின் படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதும் 2 50 ஏக்கரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது சேரன் போக்குவரத்துக் கழக பணிமனை ஒன்றை பழனியில் கட்டுவதற்காகதேவைபடுகிறது என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின் வரைபடங்கள் பழனி கோட்டாட்சித் தலைவர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை அலுவலகப் பணிநேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம்: அண்ணா வட்டம்: பழனி
கிராமம்:சிவ கிரிப்பட்டி

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 149-8 புன்செய் | திரு சு சுப்பா நாயக்கர் | 2 50 | பனைமரங்கள் பயன் தருபவை 10- கன்று 12 |

வி விஸ்வநாதன்
துணைச் செயலாளர்

டி ஐ பி ஆர் 101 அண்ணா 87 எ ஷ ஜ எல்

Edited and published by K, RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D M K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.

# மார்க்பட்டியல் மோசடி: மேலும் இருவர் கைது தஸ்தாவேஜு பறிமுதல்

மதுரை, ஜூலை. 8- மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில்போலி மார்க் பட்டியல் தயாரித்து கொடுத்ததாக மேலும் இருவர் கைது செய்யப்பட்டுள்ளனர். மார்க் பட்டியல் சான்றிதழ் ரப்பர் ஸ்டாம்புகள் ஆகியவை பறிமுதல் செய்யப்பட்டுள்ளன.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் போலியான மார்க்பட்டியல் தயாரித்து கொடுத்து போலி சான்றிதழ்களை வழங்கியது தொடர்பாக பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய 3 பேர் ஏற்கனவே கைது செய்யப்பட்டுள்ளனர்.

இதுதொடர்பாக மாநில குற்றப்பிரிவு புலனாய்வுத் துறை டி எஸ் பி செல்வின் தங்கதுரை இன்ஸ்பெக்டர் வெங்கட்ராமன், சப்இன்ஸ்பெக்டர் ராஜாமுகமது ஆகியோர் விசாரித்து வருகின்றனர்

இந்த விசாரணையின் போது கிடைத்த தகவலையொட்டி மேலும் இருவர் கைது செய்யப்பட்டுள்ளனர்

அவர்களிடமிருந்து தஸ்தாவேஜுகள் ரப்பர் ஸ்டாம்புகள் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன.

செயல்பட்டவர் சுப்பிரமணியம் வாடகைக்கு விட்டுள்ள 6 ரிக்ஷாக்களையும் குமார்தான் நிர்வகித்து வருகிறார் அத்துடன் போலி மார்க்பட்டியல் தயாரிப்பதில் புரோக்கராக செயல்பட்டவர்.

கைதான தேவதாஸ் கொடுத்த தகவலின்படி குமார்வீட்டை போலீசார் சோதனையிட்ட போது புதிய டைப்ரைட்டர், கண்ட்ரோலர் எக்ஸாமினேஷன் கையெழுத்து சீல் பல்கலைக்கழகத்தில் திருடியது ரிஜிஸ்தரார் சீல், பூர்த்தி செய்யப்படாத மார்க்லிஸ்டுகள் சான்றிதழ்கள் எம்.பி.பி.எஸ். பி.இ. எம்.எஸ். ஆகிய பட்டங்களுக்கான சான்றிதழ்கள் கைப்பற்றப்பட்டன

போலி மார்க் பட்டியல் சான்றிதழ் வழங்குவது போன்றவைகளை குமார் வீட்டிலும் டவுன் ஹால் ரோடில் உள்ள ஒரு லாட்ஜிலும் இருந்து தயாரித்துள்ளனர்

இந்த மோசடிக்குப் பலிடம் இருந்து எத்தனை பேர் டாக்டர் பட்டம் பெற்றிருக்கிறார்கள் என்பது தெரியவில்லை

இதற்கிடையில் திண்டுக்கல்லைச் சேர்ந்த குமார் என்பவர் கோர்ட்டில் முன் ஜாமீன் பெற்றிருக்கிறார்

இவர் திண்டுக்கல்லில் டுடோரியல் காலேஜ் நடத்திவந்தவர்.

இவர் எத்தனை பேருக்கு இப்படி போலிமார்க் பட்டியல் பெற்றுதந்தார் என்பது தெரியவில்லை.

இதுகுறித்து மாணவர்களை குற்றப்பிரிவு போலீஸ் படையினர் விசாரித்து வருகிறார்கள்

## குழந்தைகளுக்கு நோய் தடுப்பு சிகிச்சை: மாநகராட்சி ஏற்பாடு

சென்னை, ஜூலை 8 சென்னை மாநகராட்சி இந்த ஆண்டு ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் நகரத்தின் பல்வேறு பகுதிகளில் நோய்த்தடுப்புமுகாமினை நடத்த இருக்கின்றது ஒவ்வொரு சரகத்திலும் அமைந்துள்ள மாநகராட்சி மகப்பேறு மற்றும் குழந்தை நல மையங்கள் மற்றும் மருந்தகங்களில் இம்முகாம்கள் நடைபெற உள்ளன.

அவ்வமயம் ஒரு வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்கு இலவசமாக இளம்பிள்ளைவாத நோய்த் தடுப்பு சொட்டு மருந்து, முத்தடுப்பு ஊசி, தட்டம்மை நோய்த்தடுப்பு ஊசி ஆகியவை போடப்படும். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை இம்முகாம்களுக்கு குறிப்பிட்ட தேதிகளில் அழைத்து வந்து பயன் பெறுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்

# தமிழக சுற்றுலா கழகம் நடத்தும் புதிய சுற்றுலா

சென்னை. ஜூலை 8- தமிழக சுற்றுலா கழகம் தற்போது புதிய சுற்றுலா பயணம் ஒன்றை துவக்கியுள்ளது முதல்வர் புரட்சித் தலைவரின் 11 வது ஆண்டு பொற்கால ஆட்சி துவக்கத்தில் தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் புதிய சுற்றுலா பயணங்களை துவக்கியுள்ளது

இந்த புதிய சுற்றுலா பயணத்திற்கு குற்றாலம்-குமரி சுற்றுலா என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது.

அதன்படி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் காலை 9 மணிக்கு மதுரை தமிழ்நாடு ஓட்டலில் இருந்து புறப்படும் முதன்முறையாக வரும் 10-ந் தேதி இந்த சுற்றுலா மதுரையில் இருந்து புறப்படுகிறது

இந்தசுற்றுலா மதுரை, ஸ்ரீவில்லிபுத்தூர், குற்றாலம் முண்டந்துறை, கன்னியாகுமரி திருச்செந்தூர் மதுரை ஆகிய வழித்தடத்தில் செல்லும்

இதற்கான கட்டணம் ஒரு நபருக்கு 225 ரூபாய் ஆகும் சிறுவர்களுக்கு [5 வயது முதல் 12 வரை] கட்டணம் 175 ரூபாய் ஆகும்.

5 வயதுக்கு உட்பட்ட சிறுவர்களுக்கு கட்டணம் கிடையாது

சென்னையிலிருந்து இந்தசுற்றுலாவில கலந்து கொள்ள விரும்புபவர்களுக்கு மதுரை செல்ல வசதி செய்யப்பட்டுள்ளது

இந்த சுற்றுலா செல்வதற்கு முன்னதாக பதிவு செய்யும் இடங்கள் வருமாறு:-

சென்னையில் உள்ள சுற்றுலா வளர்ச்சிக் கழகம் தொலைபேசிஎண் 849803, 849115, மதுரை ஓட்டல் தமிழ்நாடு தொலைபேசி எண் 42461, 31435

## பாரதிதாசன் பிறந்தநாள் விழா

திருச்சி ஜூலை. 8- தமிழக அரசின் சார்பில் பாரதிதாசனின் 97 வது பிறந்தநாள் விழா நாளை 9 ந் தேதி திருச்சியில் நடைபெறுகிறது இவ் விழாவில் அமைச்சர்கள் கவிஞர்கள் அறிஞர்கள் மற்றும் நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள் கலந்து கொள்கின்றனர்

# அதிகாரிக்கு அடி - உதை உதவியாளர் தலைமறைவு

சென்னை ஜூலை 8- அதிகாரியின் உத்தரவுக்குக் கீழ்படியாமல் அவரை அடித்து உதைத்து பயங்கரமாக தாக்கிவிட்டு தலைமறைவாகி விட்ட உதவியாளரை சென்னை சென்ட்ரல் ரயில்வே நிலைய போலீசார் வலைவீசித் தேடி வருகிறார்கள்.

சென்னை பேசின்பிரிட்ஜ் ரெயில்வே நிலையத்தில் சீனியர் சார்ஜ்மென்னாக பணியாற்றி வருபவர் கிருஷ்ணமூர்த்தி அவருக்கு கீழ் உதவியாளராக பணியாற்றி வருபவர் லட்சுமிபதி

தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் ரெயிலில் உதவியாளராக போகும்படி அவருக்கு ஆணை பிறப்பிக்கப்பட்டது

இது குறித்து காலை லட்சுமிபதி அதிகாரி கிருஷ்ணமூர்த்தியிடம் சண்டை போட்டாராம். தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் ரெயிலில் உள்ள குளிர்சாதன பெட்டியில் 'டூட்டி' செய்ய மறுத்துவிட்டாராம் தன்னை அந்த ரெயிலில் பணியாற்ற உத்தரவிட்ட கிருஷ்ணமூர்த்தியை அடித்து உதைத்தார் என்றும் கூறப்படுகிறது ஒரு நாற்காலியை தூக்கி கிருஷ்ணமூர்த்தியின் மீது வீசினாராம். அதனால கிருஷ்ணமூர்த்தியின் முகத்தில ரத்தக் காயம் ஏற்பட்டது

இதுபற்றிய புகாரைத் தொடர்ந்து ரெயில்வே போலீசார் நடவடிக்கை எடுத்தனர் ஆனால் அதற்குள் லட்சுமிபதி தப்பி ஓடி தலைமறைவாகி விட்டார் ரெயில்வே போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் சுப்பையா இது குறித்து விசாரணை செய்து வருகிறார்

மதுரை பல்கலைக்கழகத்தில் அட்டெண்டராக வேலை செய்பவர் தேவதாஸ் (வயது-33) இவர் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்திலுள்ள எஸ் கோட்டையைச் சேர்ந்தவர்

இவர் கொடுத்த தகவலின்படி குமார் என்ற ரிக்ஷா தொழிலாளி கைது செய்யப்பட்டுள்ளார்

ஏற்கனவே கைது செய்யப்பட்ட சுப்பிரமணியம் என்ற ஊழியருக்கு உதவியாளராக

# முன்னாள்மந்திரிகட்கு மீண்டும் பதவி: பிரதமர் ராஜீவ் முடிவு



புதுடெல்லி, ஜூலை 8 மத்திய அமைச்சரவையில் விரைவில் மாறுதல் இருக்கும் என்று தெரிகிறது

அரியானா தேர்தலில் காங்கிரஸ் வெற்றி வாய்ப்பை இழந்தபின் மத்திய அரசுப் பணிகளில் மேலும்வேகத்தை ஏற்படுத்து வகையில் அமைச்சரவையில் மாற்றத்தைச் செய்ய பிரதமர் ராஜீவ் விரும்புவதாகத்தெரிகிறது

முன்னாள் அமைச்சர்கள் சிலருக்கு மீண்டும் அமைச்சர் பதவி கொடுக்கப்படும் என்றும் சில புதுமுகங்களும் அமைச்சரவையில் இடம் பெறக் கூடும் என்றும் கருதப்படுகிறது

சில மாநிலங்களில் இந்திரா காங்கிரசுக்குள் உள்ள உட்பூசல்களைச் சமாளிக்கவும் சில தீவிர நடவடிக்கைகளை பிரதமர் மேற்கொள்ள விருக்கிறார்.

மராட்டியம் பீகார் மாநிலங்களுக்கு புதிய முதல்வர்கள் நியமிக்கப் படலாம் என்னும் கருத்து நிலவுகிறது

சமீபத்தில் காங்கிரசிலிருந்துபிரிந்து சென்ற பிரமுகர்கள் மற்றும் கட்சிக்குள் உள்ள அதிருப்தியாளர்கள் ஆகியோருடன் அனுசரணையான போக்கை மேற் கொள்ளலாம் என்றும் பிரதமர் கருதுவதாகத் தெரிகிறது

## ஊராட்சிமன்றங்கள் பங்கு தொகை வழங்கு விழா

சென்னை ஜூலை 8- தமிழ்நாடு வனத்துறை சமூகக் காடுகள் திட்டத்தின் கீழ் ஊராட்சி மன்றங்களுக்கு கிராமப்புற காடுகள் வருவாயில் பங்குத்தொகை வழங்கு விழா இன்று (8ந் தேதி) மாலை அமைச்சர் வி வி சுவாமிநாதன் தலைமையில் நடைபெறுகிறது

## புரட்சிதலைவருக்கு ஆயிர வைசிய சங்கம் பாராட்டு

மதுரை. ஜூலை 8 தமிழ்நாட்டில் உள்ள ஆயிர வைசியர்களை பிற்பட்டோர் பட்டியலில் சேர்த்ததற்காக தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவருக்கு பாராட்டும் நன்றியும் தெரிவிக்கும் மாநாடு நடைபெறுகிறது இதில் அமைச்சர் ராமசாமி கலந்து கொள்கிறார்.

இச்சங்கத்தின் சார்பில் அறகட்டளை ஒன்று நிறுவப்பட்டு வருடந்தோறும் 10 மாணவ, மாணவிகளுக்கு இலவசமாக மருத்துவம் பொறியியல் பட்டப் படிப்புகள் கற்பிக்க ஏற்பாடு செய்யப்படும் மாநாட்டை ஒட்டி ஊர்வலம் நடைபெறும். வெளி நாடுகளில் இருந்தும் இதில் பலர் கலந்து கொண்டு உரையாற்றுகின்றனர் என்று மாநில சங்க தலைவர் மணிமொழியன் கூறினார்.

## நாடாளு மன்றம் கூடுகிறது

புதுடெல்லி ஜூலை 8 மக்களவை ஜூலை 27 ந் தேதி [திங்கட்கிழமை] கூடுகிறது.

## தம்பித்துரை திறந்துவைத்த சத்துணவு கூடம்

சென்னை ஜூலை 8- தர்மபுரி மாவட்டம் நாகரத்தின அள்ளியில் சத்துணவு கூடத்தை நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை திறந்து வைத்தார்.

53 பெண்களுக்கு இலவச தையற்கருவிகளையும் வழங்கினார் மாவட்ட கலெக்டர் மோகன்வர்கீஸ் விழாவுக்கு தலைமை வகித்தார்

நாமக்கல்லில் கம்ப்யூட்டர் பயிற்சி மையத்தையும் துணை சபாநாயகர் திறந்து வைத்தார்.